gistered No. M. 2330 "SIDDHANTHAM"
Vol. 39—No. 11



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தங்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

லர் 39 | பராபவ கார்த்திகை 1966 நவம்பர் | இதழ் 11

உள்ளுறை



பத்திராசிரியர்: மு. அருணாசலம், எம். ஏ.,
உதவிப் பத்திராசிரியர்: வித்துவான் அம்பை. இரா. சங்கரன்.

சைவ சித்தாந்த மகா சமாஜம்,
12, கிழக்கு மாடவீதி, மயிலாப்பூர், சென்னை-4.

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி 25 காசு

## சமாஜச் செயற்குழுக் கூட்ட அறிவிப்பு

27-11-66 ஞாயிறன்று காலை 9.30 மணிக்கு சமாஜ அலுவலகத்தில் செயற்குழுக் கூட்டம் நிகழும். மாதக் கணக்கு சரி பார்த்தல். ஆண்டுவிழா சமாஜத் தேர்வு முதலிய பல பொருள்கள் பற்றி முடிவுகள் தீர்மானிக்கப் பெறும். உறுப்பினர்கள் யாவரும் தவறாது வருமாறு கேட்டுக் கொள்ளப் பெறுகிறார்கள். (செயலாளர்)

## சமாஜச் செய்திகள்

நம் சமாஜத்தால் நடத்தப் பெறும் இளஞ் சைவப் புலவர், சைவப்புலவர் தேர்வுகள் 19-11-66, 20-11-66 சனி, ஞாயிற்றுக்கிழமைகளில், சென்னை திருச்சிற்றம்பலம் நாகர்கோயில், யாழ்ப்பாணம், மட்டக்களப்பு, காவலப்பட்டி முதலிய ஊர்களில் நிகழும். தேர்வுக்குச் செல்வோருக்குத் தேர்வெண், இடம், நேரம் முதலிய விளக்கங்கள் குறித்த கடிதம் அனுப்பப் பெறும். தேர்வுக்குச் செல்பவர் அவ்வவ்விடங்களில் சென்று தேர்வு எழுதுமாறு கேட்டுக்கொள்ளப் பெறுகிறார்கள்.

நம் சமாஜ அறுபத்தோராம் ஆண்டுவிழா திருச்சியில் டிசம்பர் 30, 31-12-66, 1-1-67 வெள்ளி, சனி, ஞாயிற்றுக்கிழமைகளில் நிகழும் என்பதை சமாஜ உறுப்பினர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறோம். தலைவர்கள் நிகழ்ச்சிநிரல் முதலியன அடுத்த இதழில் வெளிவரும். (செயலாளர்)

நம் சமாஜச்சார்பில் சித்தாந்தசிகாமணி திரு க. வச்சிரவேல் முதலியார் பி. எ., எல். டி., அவர்களுக்கும் சமாஜச் செயலாளர் திரு. தி. கி. நாராயணசாமி நாயுடு அவர்களுக்கும் மணிவிழாப் பாராட்டும் பழநி. திரு. க. அரங்கசாமி முதலியார் அவர்களுக்கு எண்பதாண்டு நிறைவு விழாப் பாராட்டும் 30-10-66 ஞாயிறு மாலை திரு. வி. க. மண்டபத்தில் சிறப்புற நிகழ்ந்தன. திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளையவர்கள் தலைமையில் பலபெருமக்கள் விழாப் பெரியோர்களை வாழ்த்திப் பேசினர்.

## பிற செய்திகள்

கிழக்குத் தாம்பரம் ஸ்ரீ கற்பக விநாயகர் பக்தஜன சபையின் ஆதரவில் மேற்படி ஆலயத்தில், 29-9-'66 அன்று சென்னை கிறித்தவக்கல்லூரி தமிழ் விரிவுரையாளர், திரு. பூ. ச கந்தசாமி எம். ஏ. அவர்கள் வள்ளலாரும் வாகீசரும்'' என்ற பொருள்பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள்.

Reg. M. 2330 உ

சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு.

மலர் 39 | பராபவ கார்த்திகை 1966 நவம்பர் | இதழ் 11

## சமாஜ வேண்டுகோள்

(ஆசிரியர்)

சமாஜ 61 ஆம் ஆண்டு விழா, சைவர் மகாநாடு முதலாயின, திருச்சிராப்பள்ளியில் இவ்வாண்டு டிசம்பர் 30, 31 ஜனவரி 1 ஆகிய தேதிகளில் வழக்கம்போல் சிறப்பாக நடைபெற ஏற்பாடாகியுள்ளது. செய்தி தனியே காணலாம். இச்சமயம் பின்னோக்கியும் முன்னோக்கியும் பார்த்தல் பயனுடையது.

சென்ற ஆண்டு சமாஜ வைரவிழா தில்லையில் சிறப்பாக நடைபெற்றது. தமிழ் நாட்டில் சமயம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டுள்ள ஒரு சங்கம் 60 ஆண்டுகள் பணிபுரிவது மிகவும் வெற்றிகரமான ஒரு செய்தி. இந்த வெற்றிக்கு எந்த இழுக்கும் வராமல் மேலும் மேலும் இதைப் பேணுவது சைவமக்கள் கடமை. சென்ற காலத்தில் தமிழ் நாட்டில் சிறப்பாக வாழ்ந்த சைவ அறிஞர் அனைவரும் சமாஜ வளர்ச்சியில் பங்கு கொண்டிருந்தனர். பல்லோருடைய தந்நலம் கருதாச் சேவை காரணமாக சமாஜம் பல பணிகள் செய்தது.

அவற்றுள் இணையற்ற ஒரு பணி, நூல் வெளியீடு. பன்னிரு திருமுறைகளின் பல பதிப்புகள், சித்தாந்த சாத்திரங்களின் இரண்டு பதிப்புகள், சங்க இலக்கியத் தொகுதி, சீவகசிந்தாமணி, திருப்புகழ்த் தொகுதி ஆகிய நூல்களை உயர்ந்த முறையில் ஆராய்ந்து, சிறப்பான ஆராய்ச்சிக் குறிப்புக்களோடு சமாஜம் வெளியிட்டது. சமாஜப் பதிப்பு என்றால் பிழையில்லாதது என்ற நினைவு தமிழ் நாட்டார் அனைவருக்கும் இருந்தது. அப்படிப் பட்ட ஒரு வேலையை இன்று யாராலும் செய்ய முடியாது என்று சமாஜம் சொன்னால், அது தற்புகழ்ச்சி ஆகாது. அதே வேலையை இன்று சமாஜமே செய்யமுடியவில்லை; காரணம் முன் போன்ற ஆராய்ச்சி மிக்க அறிஞர் சேவைக்கு முன் வருவது குறைவு. பொருள் முட்டுப் பாடும் ஒரு காரணம்.

ஆகவே இந்த நிலையில் சமாஜத்தை வளர்க்க என்ன செய்யவேண்டும் என்பதைத் தக்கார் அனைவரும் நன்கு சிந்திக்க வேண்டும். சமாஜத்தின் வளர்ச்சி சைவத்தின் வளர்ச்சியே. இன்று தமிழ் நாடெங்கும் சித்தாந்த சாத்திர அறிவு ஏற்படக் காரணமாய் இருந்தவை சமாஜத்தின் சித்தாந்த சாத்திரப் பதிப்புக்கள் என்பதைச் சைவர் அனைவரும் ஒப்புக் கொள்கிறார்கள்.

சமாஜ வளர்ச்சிக்கான சில கருத்துக்களை இங்குத் தருகிறோம்!

1. எளிய முறையில் பரிபாஷைச் சொற்களை விலக்கி, வெவ்வேறு அறிவு நிலைக்கு ஏற்றவாறு, சைவசமயம் என்ன என்பது பற்றிச் சிறு நூல்களும், பெருநூல்களும் எழுதி சமாஜ வாயிலாக வெளியிடவேண்டும். பல வகை யான அரசியல், சமூகம் பொருளியல் கலையியல் ஆகிய மோதல்களுக்கிடையே சைவமக்கள் வாழ்கின்ற இன்றைய நிலையில், நம்முடைய சமய உண்மையாது என்ற திட மான ஞானம் ஒவ்வொருவரும் பெற்றிருத்தல் வேண்டும். திடமில்லாத அறிவு, மோதுகின்ற முதல் அலையிலேயே கரைந்துவிடும். இவ்வறிவூட்டவல்ல நூல்களை எழுத அறிஞர் முன் வர வேண்டும்; வசதியுள்ளவர்கள் இலவச வினியோகமும் செய்யலாம்.

2. சமாஜ அங்கத்தினர் தொகையைப் பெருக்க வேண்டும். உணவுப் பொருள்களின் விலை கனவிலும் நினைத்திராத அளவுக்கு உயர்ந்திருக்கிறது. சமாஜமானது இந்த நிலையிலும் புண்ணியவான்களின் துணையால் மூன்று நாளைக்கு அங்கத்தினர்களுக்குச் செவிக்கு விருந்தோடு அறுசுவை உண்டியும் ஆண்டுக்கொரு முறை அளித்து வருகிறது. இந்த உண்டிச் செலவு மட்டும் ஒருவருக்குப் பத்து ரூபாய் ஆதல் கூடும். சைவ மக்கள் குறைந்த பட்சம் ஐந்து ரூபாய் செலுத்தி அங்கத்தினராதல் பெரிய காரியமில்லை. அங்கத்தினருக்கு மகாநாட்டில் கலந்து கொள்ளும் உரிமையோடு கூட, சித்தாந்தம் இதழ்கள் பன்னிரண்டு வீடு தேடி வருகின்றன. இதை எல்லோரும் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். சிற்றூரை விட்டுப் பட்டணம் தேடிச் செல்பவர் தடவைக்கு ஐந்து ரூபா செலவு செய்யாமல் வீடு திரும்ப முடியாது. ஒரு நாளைய செலவு சமாஜத்திற்கு ஓர் ஆண்டுக் கட்டணமாகி விடும். இவ்வாண்டு சமாஜ அங்கத்தினரும், இதைக் கண்ணுறும் ஏனையோரும், மனமார முயற்சி செய்து, அங்கத்தினர் தொகையை ஐயாயிரம் ஆக்கும்படி வேண்டுகிறோம். இன்று இத்தொகை ஆயிரத்துக்கும் குறைவு. தொகை பெருகினால் பத்திரிக்கையை இன்னும் அதிக பக்கங்கள் உடையதாக்க முடியும். சமய அறிவு வளரவும் வாழ்க்கை நெறிப்படவும் பத்திரிக்கை இன்னும் அதிகம் துணை செய்யும்.

3. ஆயுள் சந்தா இன்று ரூபா ஐம்பதாக வைத்திருக்கிறோம். வசதியுள்ளோர்க்கு இது பெரிய தொகையில்லை. ஆங்காங்கு முயற்சி எடுத்து ஜில்லாதோறும் நூறு பேரை ஆயுள சந்தாதாராகச் சேர்த்து விட்டால், சமாஜத்துக்குப் பணக்கவலை விட்டது. நூல் வெளியீடு போன்ற ஆக்க வேலையில் பூர்ணமாய் மனம் செலுத்த முடியும்.

4. சமாஜம் இவ்வாண்டு முதல் சைவ சித்தாந்தம் என்ற பெயரில், ஓர் ஆங்கில இதழ் ராயல் 80 பக்க அளவில், வெளியிட்டு வருகிறது. 3 இதழ்கள் வெளி வந்து விட்டன. சமாஜத் துணைத்தலைவரும் சிறந்த ஆங்கில

எழுத்தாளருமான திரு. நல். முருகேச முதலியாரவர்கள் இதன் ஆசிரியராக இருந்து நடத்தி வருவது பெரிதும் மகிழ்ச்சிக்குரியது. இவ்விதழ் ஆங்கிலம் வழங்கும் நாடெங்கும் சென்று சிவமணம் பரப்ப வேண்டுமென்பது சமாஜத்தார் அவா. இது நிறைவேற, பத்திரிகை பல்லாயிரக்கணக்கில் விநியோகம் ஆக வேண்டும். சைவ அன்பர்கள் மிகவும் முயன்று இதற்கு அதிகமான சந்தாதாரைச் சேர்த்துத் தருமாறு கேட்டுக் கொள்ளுகிறோம்.

5. ஜில்லாக்கள்தோறும் உள்ள அங்கத்தினர்கள் தங்கள் நகரங்களில் சமாஜத்தின் கிளைகளாகத் தங்களை வகுத்துக் கொண்டு, சைவ வளர்ச்சிக்கும், சமாஜ வளர்ச்சிக்குமான காரியங்களைச் செய்தல் வேண்டும். ஆலய வழிபாடு, திருமுறை ஓதுதல், சமய உண்மையை உணர்ந்து சமய வாழ்க்கை வாழ்தல், சிறப்பான அடியவர்களின் திருநாளையாவது கொண்டாடுதல், மாணவரிடை திருநீறு அணிதல், ஆலயம் செல்லுதல், திருமுறை ஓதுதல்போன்ற பழக்கங்களை ஏற்படுத்துதல் ஆகியவற்றில் கவனம் செலுத்தல் வேண்டும்.

6. சைவர் என்போர் அனைவரையும் திருமுறைகள் பற்றியும், சித்தாந்த சாத்திரங்கள் பற்றியும் அறிவு பெறுமாறு செய்தல் வேண்டும். குறைந்தது திருவாசகம் ஒரு நூலாவது எல்லோரும் நன்றாகப் பயின்றிருத்தல் வேண்டும்.

7. இயன்றவரை, கிடைக்கின்ற சமாஜ நூல்களை வாங்கி விநியோகம் செய்ய வேண்டும். ஒரு ஜில்லாவில் 200 புத்தகம் விலையாகும் என்றால், தேவைப்படுகின்ற சிறப்பான சைவ சமய நூல்கள் அனைத்தையும் சமாஜம் மாதம் ஒன்றாக அச்சிட்டு அடக்க விலையில் வெளியிட்டுக் கொண்டே இருக்கலாம். நூல்கள் பொதுவாக இன்று அதிக விலையில் விற்கப்படுகின்றன; பிழைகளோடு வெளி வருகின்றன. ஆகலால், இத்துறையில் சமாஜம் தொண்டு செய்ய நிரம்ப இடமுள்ளது.

8. ஜில்லாதோறுமுள்ள சமாஜ அங்கத்தினர் ஒருவரையொருவர் அறிமுகம் செய்து கொண்டு, சைவம் என்ற ஒரு பெருங் குடும்பமாகத் தங்களை ஆக்கிக் கொள்ள வேண்டும்.

9. பாலசுப்பிரமணிய முதலியார் என்ற ஒருவர் இருந்து, தம்முடைய அர்ப்பணத்தால், செயற்கரிய செயல்களை யெல்லாம் சமாஜத்தைச் செய்வித்தார். இப்போது பலர் கூடியும் அவ்வொருவர் இடத்தை நிரப்ப முடியவில்லை. எங்களுடைய ஆசை, ஜில்லாவுக்கு ஒரு பாலசுப்பிர மணியம் தோன்ற வேண்டும் என்பது.



## ஆசிரியர் குறிப்பு

1. சித்தாந்தம் பத்திரிக்கைக்கு ஏற்ற சைவசமயக் கட்டு ரைகள் அனுப்பும்படி அன்பர்களைக் கேட்டுக் கொள் கிறோம், சாத்திரம், திருமுறை, அடியார், தலங்கள் பற்றிய விளக்கக் கட்டுரைகள் அனுப்பலாம்.

2. எளிய முறையில் பாமர மக்களும் புரிந்து கொள்ளக் கூடிய விளக்கக் கட்டுரைகள் ஒரு வகை. குறித்த சமயப் பொருள் பற்றிய ஆராய்ச்சிக் கட்டுரை மற்றொரு வகை. இரண்டுக்கும் சித்தாந்தத்தில் இடமுண்டு.

3. பத்திரிக்கையில் இடம் மிகவும் சுருக்கம். ஆதலால் கட்டுரை அனுப்புவோர் அன்பு கூர்ந்து சுருங்கச் சொல்லி விளங்க வைப்பதையே வரவேற்கிறோம்.

4. கட்டுரைகளைப் பிரசுரிக்காததனால் கட்டுரை தகுதி யற்றது என்பது பொருளன்று. சர்ச்சிலையும், பாரதியை யும் பற்றிய கட்டுரை சிறப்பாய் இருக்கலாம் ஆனால் நம் பத்திரிக்கைக்கு அக்கட்டுரைகள் தேவையில்லை. ஆகவே அன்பர்கள் அத்தகைய கட்டுரைகளை இங்கு அனுப்ப வேண்டாம். முன்னமே வெளிவந்த கட்டுரைகளை யும் அனுப்ப வேண்டாம்.

5. அகில உலக நடைமுறைச் செய்திகளில், சமயச் சார் பாய், மக்கள் வாழ்க்கையை உயர்த்தவல்ல பொருளைத் தேர்ந்தெடுத்து அனுப்பினால் அவை கவனிக்கப் பெறும்.

6. கட்டுரை திருப்பி அனுப்புவதானால் அவசியம் அதற் கான தபால்தலையை உடன் அனுப்ப வேண்டும் இட மின்மை பற்றிச் சில கட்டுரைகள் தாமதமாக வெளி வருதல் கூடும். அன்பர்கள் பொறுக்க. (ஆசிரியர்)

# திருவலஞ்சுழி வெள்ளைப்பிள்ளையார் கோயில்

மு. அ.

திருவலஞ்சுழி சோழநாட்டுக் காவிரித் தென்கரைத் தலங்களுள் முக்கியமானதொன்று. கும்பகோணம்—தஞ்சை பஸ் மார்க்கத்தில் கும்பகோணத்திலிருந்து 5 மைல் தூரத்திலுள்ள சிறப்பான சிவஸ்தலம். சாலையிலிருந்து வடபுறம் சில கஜ தூரத்தில் கோயில் அமைந்துள்ளது. கிழக்கு நோக்கிய சந்நிதி, " என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே! " என்ற சம்பந்தர் தேவாரம் பெற்ற தலம். காவிரி வலமாகச் சுழித்துச்சென்றமையால் இப்பெயர் பெற்றது. இக்கோயில் மிகவும் பெரியது. இதனுள் அமைந்த சிறு பரிவார தேவதைகளின் கோயில்கள் மிக்க சிறப்புடையன. ஒன்று வெள்ளைப்பிள்ளையார் கோயில் என்ற விநாயகர் கோயில்; மற்றது வைரவர் கோயில்.

இராச கோபுரத்தைக் கடந்து உட்சென்றவுடனே, நேரே சந்நிதிக்கெதிரில் நடுவில் இருப்பது வெள்ளைப் பிள்ளையார் கோயில். இதை வலமாகச் சுற்றிக் கொண்டு தான் கோயிலுக்குள் நுழைய முடியும். வெள்ளை நிறமுடைய விநாயகரானமையால் இப்பெயர் பெற்றது. விநாயகர் சந்நிதி எதிரே கீழ்ப்புறம் கற் பலகணி. சுமார் 9 அடி உயரம், ஆறடி அகலம் இரண்டங்குலப் பருமன்; இதுபோன்ற ஒன்று கட்டிடச் சிற்பங்களில் செய்தற்கரியது என்று பிரசித்தி பெற்றது. சோழ நாட்டின் செய்தற்கரிய கட்டிடச் சாதனைகள் ஐந்தில் இதுவும் ஒன்று. இப் பலகணி மூன்று துண்டுகளாயிருக்கும். இக்காலத்தில் காற்றுப் போவதற்காக இரும்புக் கம்பியும் கருங்கற் சல்லியும் சிமிட்டியும் கலந்து அலங்காரமாகச் செய்யும் ஆர். ஸி. ஜாலி வேலை போன்றது. இவ்வுருவம் கருங்கல்லினால் ஒரு தச்சன் செய்திருப்பது என்றைக்குமே பார்த்து அதிசயிக்கத்தக்க ஓர் அற்புதச் சிருஷ்டியாகும்.

வாயில் தென்புறம், விநாயகர் சந்நிதி, சிறிய இடம். பத்துப்பேர் தான் நிற்கலாம். விநாயகர் தனி மூர்த்தியாக அமர்ந்திருக்கிறார். மூர்த்தி வெண்ணிறமென்று முன்னே குறிப்பிட்டோம். காரணம் இது வெள்ளெருக்கம் வேரினாலான திருவுரு. ஆயிரம் வருடங்களுக்கு முன், எருக்கம் வேர் இவ்வாறு விநாயகர் போல இருந்தமை கண்டு இவ்வேருக்குப் பிரதிட்டைசெய்யப்பட்டது போலும். கால வேகத்தால் மரத்தினாலான பொருள் கெட்டுப் போகும் என அஞ்சி, இந்த உருவத்துக்கு மலரோ, நீரோ இடுவதில்லை; அபிஷேகமில்லை. மாடத்தின் வெளிப்புறத்தில் சிறு திருவாசி அமைத்து, அதற்கே மலரணிவித்தல் முதலான எல்லாச் சிறப்பும் நடைபெறுகிறது. விநாயகரைத் தரிசிப்பதோடு சரி. குருக்கள் கையால் தொடுவது கூட இல்லை; தொட்டால் இறந்து விடுவார் என்ற ஒரு நம்பிக்கையும் உண்டு. தொட்டால் மூர்த்தியின் வடிவமாகிய மரப் பொருள் பொடிந்து போகும் என்ற அச்சமே.

வேரைப் பலப்படுத்துவதற்காகவும், பூச்சி முதலியன அரிக்காமலிருப்பதற்காகவும், பச்சைக் கற்பூரம் சாத்துதல் என்ற ஒரு வழக்கம் உண்டு. பச்சைக் கற்பூரம் பெரிய அளவில் சேர்த்து மிகச் சன்னமாக மாவாக அரைத்து மெல்லிய துணியில் கட்டி, தூள் பறந்து மூர்த்தி மீது படியும் படி தட்டுவார்கள். பச்சைக் கற்பூரப்பொடி மூர்த்தி மீது படிய, பூச்சிகள் வரா. இருந்தாலும் சாகும்; உருவத்துக்கு இடையூறு நேராது.

இந்த மூர்த்தி கடல் நுரையாலானவர் என்று ஒரு பத்திரிக்கையில் எழுதியிருப்பதைக் கண்டோம். இது பிழை. கடல் நுரையாலானவர் கும்பகோணத்தருகில் உள்ள திருப்புறம்பயத்திலுள்ள பிரளயம் காத்த விநாயகர். இவரைப் பற்றிப் பின்னர் எழுதுவோம். வெள்ளைப்பிள்ளையார் மேற்சொன்னபடி உருவமுடையவரேயன்றி, கடல் நுரையாலான உருவமுடையவரல்லர்.

## திருவலஞ்சுழி வைரவர் கோயில்

திருவலஞ்சுழியில் வைரவர் வழிபாடு மிகப் பழங் காலத்திலேயே சிறப்பாக இருந்தது போலும். திருஞான

சம்பந்தர் வலஞ்சுழி பற்றி மூன்று பதிகங்கள் பாடியிருக்கிறார். இரண்டாம் திருமுறையில் பண் இந்தளம், வினவுரை இரண்டாம் பதிகம் முழுமையும் ( 1480–1490 ) "வலஞ்சுழியீர் சொலீர்......வெண்தலையிற் பலி கொண்டதே?" என்று பாடல்தோறும் வினவுகிறார். நட்டராகப் பண்ணில் (2621) "வெண்தலை கைப்பிடித்து அகந்தோறும் பலிக்கென்று வருவரே வலஞ்சுழியடிகளே" என்கிறார். மூன்றாந் திருமுறை, பழம்பஞ்சுரப்பண்ணில் மூன்று பாடல்களில் (3935, 3939, 3642) "வலஞ்சுழி மேவியவர் ஊரணிபெய் பலிகொண்டு உகந்த வகை அறியோமே" என்று பாடுகிறார். இவ்வாறு சம்பந்தர் பலியேற்ற செய்தியைப் பாடுவது, வைரவ மூர்த்தியின் சிறப்பினால் என்று கருதுவது தவறாகாது.

முதலாம் இராஜேந்திர சோழன் ( 1012 – 1044 ) தனது சாம்ராஜ்யத்தைப் பல வகையாலும் பெருக்கியவன். கங்கை வரை தன் படையை அனுப்பினான். கங்கைகொண்ட சோழபுரம் நியமித்தான். அவன் ஈடுபட்ட போர்கள் எண்ணில் அடங்கா. கடல் கடந்து பெரும் கடற்படை அனுப்பி அகன்ற நிலப் பரப்பைத் தன் ஆளுகையில் வைத்திருந்தான். எனினும் தான் செய்த போர்களுக்காகவும் அவற்றால் சிந்திய இரத்தத்திற்காகவும் மிகவும் வருந்தி, அதற்கும் பிராயச் சித்தமாக இங்கு வைரவர்கோயிலைக் கட்டிக் கும்பாபிஷேகம் செய்து இங்கு தானும் திலகற்பம் புக்கான என்று வரலாறு கூறும். இரணிய கற்பம் போல, திலகற்பம் என்பது, எள்ளினால் தன்னை மூடிக்கொள்வது போலும். இத்துணைச் சிறப்பும் வரலாற்றுத் தொடர்பும் கொண்டது இவ்வைரவர் கோயில் என்பதை நாம் அறிதல் வேண்டும்.

இவ்வைரவர் கோயில், தனியான கோயிலாக, பிரதான கோபுரம் கடந்து உள் நுழைந்ததும், தென்புறமான சிறு சுவருக்கும் அப்பால், விசாலமான தென்னந் தோப்பின் நடுவில் இருக்கிறது. இது முதல் இராஜேந்திர சோழன் கட்டியது; முழுமையும் கல்லாலானது. வைரவர் மேற்குப் பார்த்த சந்நிதி; மிகப்பெரிய உருவம். அழகான

அங்க அமைப்பும் சிற்ப அழகும் பொருந்தியது. கரு வறைச்சுவரின் வெளிப்பாகம் முழுமையும் கல் வெட்டுக் கள் நிரம்பியுள்ளன. வைரவமூர்த்தியின் உருவம் பின்னம்; இரு கைகள் உடைந்திருக்கின்றன.

கருவறைச் சுவரின் புறத்தே மூன்றுபுறமும் கோட் டங்களில் சிறப்பான உருவங்கள் இருந்து கிலமாயின என்று தெரிகிறது. தென்புறம், தனியே தட்சிணாமூர்த்தி உடைந்து கிடக்கிறார். இவருக்குரிய கோட்டத்தில் நர்த்தன விநாயகர் நிற்கிறார். பின்புறம் ஒரு சிறு பைரவர் வடிவமும் கஜலெக்ஷ்மியும் உடைந்து கிடக் கிறார்கள். முன்புறம் அர்த்த மண்டபம் இருந்து அடி யோடு இடிந்து போனமை தெரிகிறது. அதற்கும் முன்னால் பெரிதான ஒரு கருங்கல் மகா மண்டபம் இருந்து இடிந்து போன அடையாளங்கள் உள்ளன; அடித்தளம் அப்படியே கிடக்கிறது. இடிந்த கற்கள் எங்கும் சிதறிக் கிடக்கின்றன.

விமானம் மீது தங்கப்பட்டி மரங்கள் கணக்கில் லாமல் முளைத்து வளர்ந்து ஆல் போல் பெருகி வேர் விட்டு, விமானத்தையும் கோயிலையும் முழுமையும் உடைத்து விட்டன. விமானம் முழுமையும் புதிதாகத் தான் கட்டியாக வேண்டும். ஆனால் கோயில் அப்படி யன்று. கோயில் சுவரின் கறகள் நல்ல நிலைமையில் உள்ளன. அவற்றைச் சுவரில் இருந்தபடியே எண்ணிட் டுப் பிரித்து அடுக்கி வைத்துவிட்டு, அடித்தளம் முதலிய வற்றைச் சீர்திருத்திக் கொண்டு, மீண்டும் கற்களை எண்முறைப்படி அடுக்கிக் கொண்டே வந்தால் வைரவர் கோயிலாகி விடும். இதற்கு ஆகக் கூடிய செலவு சுமார் ஐயாயிரம் ரூபாய் ஆகும். இன்று திருவலஞ்சுழி கோயில் நிர்வாகம் சுவாமிமலை தேவஸ்தானத்திலிருந்து நடை பெறுகிறது. அத்தேவஸ்தானத்திற்கு வருவாய் நிரம்ப உண்டு. இத்திருப்பணிச் செலவு அதற்கு ஒரு பிரமாதம் இல்லை. தேவஸ்தானத்தாரும் அறநிலைய அதிகாரிகளும் மனம் வைத்தால் ஒரே நாளில் இது நடந்துவிடும்.

புத்துணர்ச்சி பெற்றுத் தன் பெருமையைத் தன் மக்களுக்கும் உலகத்தார்க்கும் உணர்த்த எண்ணும் எந்த நாடும், தன்னுடைய பண்டைப் பெருமையையும் வரலாற்றுச் செய்திகளையும் உணர்த்துகின்ற எந்தச் சின்னமும் அழிய விடாது. ஆனால் நம் நாட்டிலோ, இன்று நம் கண் முன்னே சரித்திரச் சின்னங்கள் ஒவ்வொன்றாக அழிந்து வருகின்றன. பலவும் அழிந்த பின் மிச்சமிருப்பது வெறும் ஏட்டில் எழுதியுரைத்தஉரை. இது பொய்யுரை என்று கூறுதல் எளிது. ஆனால் சிற்பச் சான்றுகள் கண்முன்னே காணும்போது, அவை மெய்மையையே நிச்சயம் உணர்த்துகின்றன என்றநம்பிக்கை பிறக்கும். எனவே இவை மங்கி இடிந்து மண்ணாகாமல் காப்பது நம் கடன்; பொது மக்கள், அறநிலையத்துறை, அரசாங்கம், தொல் பொருள் பாதுகாப்புத்துறை ஆகிய இவற்றின் கடனுமாகும். அரசாங்கம் செய்ய முடியாததன்று; அதிக வரும்படியுடைய கோயில் பணத்தை இதற்கு ஈடுபடுத்தினால் இது புத்துயிர் பெறும். இது முடியவில்லை என்றால் யுனெஸ்கோ சிறப்பான உதவி செய்கின்றது: பெற்று ஆவன செய்ய முற்படலாம். உணர்ச்சி தேவை.

இது உடனே செய்ய வேண்டிய வேலை. கோவிலடியருகேயுள்ள சடைமுடி மகாதேவர் கோயில், மண்டங்குடி திருபுவன நாயகர் கோயில் என்பனவும் இதையொத்தனவே. இவைபற்றி முன்னமே எழுதியிருக்கிறோம்.

---

உ

சிவமயம்

# கல் ஒரு பிறவியாகுமா?

(புலவர்மணி—சித்தாந்த வித்தகர்
முரு. பழ. இரத்தினம் செட்டியார்)

மணிவாசகப் பெருமான்,

" புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்

வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் ''

என்று கூறியருளியிருக்கிறார்.

புல், பூடு, புழு, மரம், விலங்கு, பறவை, பாம்பு, கல், மனிதர், பேய், கணம், அசுரர், முனிவர், தேவர் எனப் பதினான்கு வகைப்பிறவி வேறுபாடுகள் இத்திருவாக்கில் காணப்படுகின்றன. இவற்றுள் "கல்" ஒன்று நீங்க வாக ஏனையவற்றைப் பற்றிக் கருத்து வேறுபாடு இல்லை. கல் ஒரு பிறவியாகிவிடுமா? என்பதே சிந்திக்க வேண்டிய பொருளாகும்.

கல் உயிரற்ற சடப்பொருள். அதன்கண் உயிர் இருப்பதற்கான அறிகுறி எதுவும் இல்லை. விஞ்ஞானம் இன்றுவரை கல்லைச் சடப்பொருளாகவே கொண்டுள்ளது. கல்லுக்கு வளர்ச்சியுண்டு என்று சிலர் கூறுவர். இரசாயனப் பொருள் மாற்றத்தால் இவ்வளர்ச்சி ஏற்படுகிறது. எனவே இஃது இரசாயன வளர்ச்சியே (Chemical growth) அன்றி உயிர் வளர்ச்சி (Biological-growth) அன்று என்று விஞ்ஞான நூற்கள் தெளிவு செய்துள்ளன.

சிவஞான பாடியத்தில், "நிலம், மலை, கடல் முதலியவற்றின் ஏகதேசமாகிய மண், சிலை, நீர் முதலியன" எனச் சிவஞான சுவாமிகள் குறிப்பிடுவதிலிருந்து சிலையை அதாவது கல்லை உயிரற்ற சடப்பொருளாகவே சைவ சித்தாந்தம் கொண்டுள்ளதென்பதும் புலனாகும்.

கல்லுக்கு உயிர் உண்டென்றால் ஏனைச் சடப்பொருள்களாகிய மண், தீ, காற்று, நீர், முதலியவற்றிற்கும் உயிர் உண்டென்றே கொள்ள வேண்டியது வரும். இதனால் கல் ஒரு பிறவியாகுமானால், மண், தீ, காற்று, நீர் முதலியனவும் பிறவியேயாகும். மணிவாசகர் கல்லாகப் பிறந்திளைத்ததாக கூறுகின்றாரே அல்லாமல் மண்ணாகவும், நீராகவும், காற்றாகவும் பிறந்திளைத்ததாகக் கூறவில்லை.

கல்லைச் சொன்னாலே மண், நீர், முதலியனவும் பெறப் படும் என்றால், புல்லைச் சொன்னாலே பூடு, மரம் பெறப் படும் என்பதில் தவறில்லை. மணிவாசகர் புல்லைச் சொன்னதோடு அமையாமல் பூடு, மரம், முதலியவற் றையும் சொல்லியிருக்கிறார். எனவே அவர் கல்லைச் சொன்னதோடு அமையாமல் மண், நீர், காற்று முதலிய வற்றையும் சொல்லியே இருக்க வேண்டும். அங்ஙனம் அவர் சொல்லாமல் கல்லை மட்டும் குறிப்பிடுவதால், கல்லுக்கு அவர் வேறு பொருள் கொண்டிருக்கிறார் என்றே தோற்றுகிறது.

இறைவன் உயிருள்ள பொருள், உயிரற்ற பொருள் ஆகிய யாவற்றினும் நிறைந்திருப்பதால் கல் ஒரு பிறவியே என்றால், மண், தீ, காற்று முதலியவற்றிலும் அவன் நிறைந்திருப்பதால் அவையும் பிறவியே என்று கொள்ளப் பட வேண்டும். அங்ஙனம் கொள்ளாமல் கல்லை மட்டும் பிறவியாகக் கொள்வதற்கு வேறேதேனும் காரணம் இருக்க வேண்டும்.

"கல்லாய் மனிதராய்" என்பதில் இடையிலுள்ள யகர ஒற்று ஏடெழுதுவோரால் பிழையாகக் கொள்ளப் பட்டுள்ளது; "கல்லாமனிதராய்" என்றே அஃதிருக்க வேண்டும்; கல்லாத மனிதப் பிறவியையே மணிவாசகர் வெறுத்துக் கூறியிருக்கிறார் என்று உரை கூறுவதும் பொருத்தமாகக் காணப்படவில்லை. கல்லாத கண்ணப் பரைக் "கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்ட பின்" என அன்புருவமாக அவர் பாராட்டி இருக்கிறார். "கற்பனவும் இனி அமையும்" என்றும் "கல்வி என்னும் பல கடல் பிழைத்தும்" என்றும் கல்வி அறிவை அவர் வெறுத்தும் கூறியருளியிருக்கிறார். எனவே கல்லாத மனிதப்பிறவி, கற்ற மனிதப்பிறவி என வேறு பிரித்து ஒன்றை மதித்தும் ஒன்றை வெறுத்தும் அவர் கூறியுள் ளார் என்பது பொருந்தாது.

திருவாசகம் சைவத் திருமுறைகளுள் ஒன்று. சைவ சாத்திரத் துணை கொண்டு அதற்குப் பொருள் காண்பதே சிறப்பு.

சைவசாத்திரமாகிய சிவஞான சித்தியாரில் உயிர்கள் எடுக்கும் பிறவி வேறுபாடுகள் குறித்துக் கூறப்பட்டுள்ளது.

பருவுடல் நீங்கிய உயிர் சுவர்க்க, நரகம் சென்று இன்ப, துன்பங்களை அநுபவித்துப் பின் உலகிடைப் பிறக்கும். சுவர்க்கத்தில் தேவ யாக்கையோடு இன்பத்தை அநுபவிக்கும்; நரகத்தில் பூதயாக்கையோடு துன்பத்தை அநுபவிக்கும். பூத யாக்கைக்கு "யாதனாசரீரம்" என்று பெயர். இதனைச் சிவஞான சித்தியாரில் வரும் "பூதனா சரீரம் போனால்" என்னும் செய்யுளால் அறியலாம்.

எல்லா உயிர்களும் இங்ஙனம் பருவுடல் விட்டவுடன் நரகத்தில் போவதில்லை. சில உயிர்கள் உடனே மறு சுவர்க்க, பிறவி எடுப்பதுண்டு. அவமிருத்தாக அகால மரணம்எய்திய ஆசைமிக்க கொடிய உயிர்கள் பருவுடல் நீங்கிய அளவில் மறுபிறவி எடுக்காமலும், சுவர்க்க நரகத்திற்குச் செல்லாமலும் பூவுலகிலேயே, சிலகாலம் நுண்ணுடலோடு உலவுவதுண்டு. யோனி வாய்ப்பட்டுப் பிறந்தால் தான் பிறப்பென்பதில்லை. வினைக்கீடாக உயிர்கள் எந்த உடலில் நின்று அநுபவித்தாலும் அது பிறப்பென்றே கூறப்படும். வேறு தேகம் எடுக்காமல் நுண்ணுடலோடு உலகிலேயே உலவுகின்ற இவ்வுயிர்கள் பேய்ப்பிறப்பை அடைந்துள்ளன என்று சொல்லப்படும். மணிவாசகர், "பேயாய்" என இப்பேய்ப்பிறப்பைக் குறிப்பிடுவது காண்க.

உயிர்கள் பேயாய் நின்றுலவுவது ஒரு வகை; மற்றொரு வகையும் உண்டு. பேய்ப்பிறப்பில் அறிவு விளக்கம் இருப்பதால் பல செயல்களும் செய்யவியலும் ஆனால் மற்றொரு வகைப்பிறப்பில் உயிர்கள் எவ்விதமான அறிவு விளக்கமும் இன்றிச் செயலற்றுக் கிடக்கும். மிக மிகக்கொடிய பாவம்செய்துள்ள உயிர்களில் சில பருவுடல் நீங்கியதும் இப்பிறப்பினை எய்தும். பேய்ப்பிறப்பும் நுண்ணுடலோடு நிற்பதுதான்; இப்பிறப்பும் நுண்ணுடலோடு நிற்பதுதான்; ஆனால் முன்னதில் அறிவு, இச்சை

செயல்களின் இயக்கம் உண்டு; பின்னதில் எதுவும் இல்லை. இதனாலேயே இதனைப் பேய்ப்பிறப்பாகக் கொள்ளாமல் வேறொரு பிறப்பாகக் கொள்ளப்பட்டுள்ளது. இப்பிறப்பிற்கு என்ன பெயர்? நுண்ணுடலில் எவ்வித உணர்வும் இன்றிக் கற்போலக் கிடத்தலால் இப்பிறப்பிற்குக் "கற்பிறப்பு" என்று பெயர். "பேம்–அச்சம்" என்னும் பொருளில் கண்டார்க்கு அச்சத்தைத் தருவதாகிய பிறப்பிற்குப் "பேய்ப்பிறப்பு" என்று காரணப் பெயர் அமைந்தது போல, உணர்வற்றுக் கற்போலக் கிடத்தலாகிய இப்பிறப்பிற்குக் "கற்பிறப்பு" எனக் காரணப் பெயர் அமைந்துள்ளது. அநாதி கேவலத்திலும் உயிர்கள் உணர்வற்றுக் கிடக்கும். ஆனால் கொடிய பாவம் காரணமாக நுண்ணுடலோடு உணர்வற்றுக் கிடத்தலாகிய கற்பிறப்பிற்கும் ஆணவமலம் ஒன்றே காரணமாக எவ்வித உடலும் இன்றி உணர்வற்றுக் கிடக்கும் அநாதி கேவலத்திற்கும் வேறுபாடு பெரிதாகும்.

சிவஞான சித்தியார் சுபக்கம். 2ஆம் சூத்திரம். 37வது செய்யுள் பின் வருமாறு:—

" உடல்விடா யோனி பற்றி உதிப்பினும் உதிக்கும் ஒன்றில்
படர்வுறுது உறும்பா வத்தால் பாடாணம் போற்கி டந்து
கடனதாம் காலம் சென்றால் கடுநர கதனில் வீழ்ந்துஅங்கு
இடருறும் உருவம் கன்மத் தளவினில் எடுக்கும்
அன்றே "

இப்பாடலின் பொருள்; பருவுடல் நீங்கியதும் உயிர்கள் உடனே மற்றொரு கருவில் பதிந்து பிறவி எடுப்பதும் உண்டு; மிகப்பெரிய பாவம் காரணமாகச் சில உயிர்கள் உலகில் பிறக்காமலும் சுவர்க்க, நரகத்திற்குச் செல்லாமலும் நுண்ணுடலோடு எவ்வித உணர்வும் இன்றிக் கற்போலக் கிடந்து உரிய காலம் சென்றதும் கொடிய நரகத்திற்குச் சென்று துன்பத்தை அநுபவித்துப் பின் வினைக்கேற்றவாறு பிறவி எடுப்பதும் உண்டு."

இப்பாடலில் வரும் "பாடாணம் போற் கிடந்து" என்னும் பகுதியே ஈண்டு ஆராய்தற்குரியது. "பாடாணம்" என்றால் கல். "கற்போலக் கிடத்தல்" என்றால் எவ்வித உணர்வும் இன்றிக் கிடத்தல் என்பது பொருள். "ஒன்றினும் படர்வுறாது" என்பதால் வேறுடலோ, சுவர்க்க, நரகமோ எய்தாமல் உயிர் கிடக்கும் என்பது புலனாகும். "உறும் பாவத்தால்" என்பதால் மிகப்பெரிய பாவம் செய்த உயிர்களே கற்போலக் கிடத்தலாகிய இப்பிறப்பினை எய்தும் என்பது தேற்றம். வேறுடல் இல்லை என்றால், நுண்ணுடல் மட்டும் எப்படி இருக்கும் என்று வினவலாம். நுண்ணுடல் படைப்புக் காலம் தொடங்கி முத்திக் காலம் வரையிலோ, மகாசங்காரம் வரையிலோ அழியாது நிற்கும் என்பது சித்தாந்த முடிபு. எனவே பருவுடல் நீங்கிய அளவில் நுண்ணுடலிலேயே கற்போலக் கிடத்தலாகிய இப்பிறப்பினை உயிர்கள் எய்தும் என்பது தெளிவு.

சடப்பொருளாகிய கல் ஊனக் கண்ணுக்குப் புலனாகும். நுண்ணுடலில் கற்போலக் கிடத்தலாகிய நிலை ஊனக்கண்ணுக்குப் புலனாகாது. ஆகவே சடப்பொருளாகிய கல் வேறு; கற்பிறப்பாகிய இது வேறு. இரண்டிற்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. பெயர் ஒற்றுமை கொண்டு நாம் மயங்கக் கூடாது. சடப்பொருளாகிய "கல்லாக" உயிர்கள் பிறவி எடுப்பதில்லை. நுண்ணுடலில் உணர்வற்றுக் கிடக்கும் நிலையினையே, கற்போலக் கிடக்கும் காரணத்தால் "கல்லாதல்" எனக் கூறப்படுகிறது. ஆகவே சடப்பொருளாகிய கல்லை இப்பிறப்பினோடு தொடர்பு படுத்திப் பேசுவது பொருந்தாது.

சிவஞான சித்தியார் சுபக்கம் 2. சூத்திரம் 44வது செய்யுளில் ஆசிரியர் "அகலிகை கல்லதானாள்" என்பதற்கு அகலிகை கல்லாகி விட்டாள் எனப் பொருள் செய்யக் கூடாது. 37வது செய்யுளில் "பாடாணம் போற் கிடந்து" என்று தான் ஆசிரியர் சொல்கிறார். உயிர் கல்லாகக் கிடப்பதென்றால் ஆசிரியர் "பாடாணமாகக் கிடந்து" என்று கூறியிருப்பார். எனவே "அகலிகை

கல்லதானுள்'' என்பதற்கு அவள் சாபத்தால் பருவுடல் ஒழிந்து, நுண்ணுடலில் கற்போலக் கிடந்தாள் என்றே பொருள் செய்ய வேண்டும். அவள் கிடந்த இடம் காட்டகத்தே உள்ள ஒரு கல்லாக இருக்கலாம். இராமர் திருவடி அக்கல்லின் மீது பட்டதும் நுண்ணுடலில் ஆண்டுக் கிடந்த அகலிகை உணர்வு பெற்றுப் பருவுடலோடு காட்சி அளித்தாள் என்று கூறுவதே சித்தியாரில் வரும் 37வது செய்யுளுக்குப் பொருந்துவதாகும்.

மணிவாசகர் "கல்லாய் மனிதராய்" என்று கூறும் பகுதிக்குக் "கல்லாகியும் மனிதராகியும்" என்றே பொருள் எழுதிக், "கல்லாதல் என்பது கொடிய பாவம் செய்த உயிர் பருவுடல் நீங்கிய அளவில் நுண்ணுடலில் பரம இருளில் மூழ்கி எவ்வித உணர்வும் இன்றிக் கற்போலக் கிடக்கும் நிலையாகிய ஒரு வகைப் பிறப்பினைக் குறிக்கும்; சடப்பொருளாகிய கல்லை இது குறிக்காது" என விசேட உரை கூறுவதே சைவ சாத்திரத்திற்கேற்ற பொருளாக விளங்கும். அறிஞர்கள் ஆராய்வார்களாக!



# பிறர் பார்வையில் நம் சமயம்

## ஆல்பர்ட் சுவிட்சர் (Albert Scheveitzer)

கொ. நீ. சிங்காரவேலு, M. A.,

நமது சமயம், தத்துவம் இவைகளைப் பற்றிப் பிறநாட்டார் என்ன கருதுகிறுர்கள் என்று தெரிந்து கொள்வதில் மிக்க பயனுண்டு. நீண்ட காலப் பழக்கத்தினால் நம் குறைகள் நமக்குத் தோன்றுவதில்லை. குறைகளே, குணங்களாகவும் தோன்றும். புறத்தேயிருந்து உணர்ச்சி வயப்படாமல் நம் சமய, தத்துவக் கொள்கைகளை ஆராய்வதால் அவைகளில் வலிமை, மென்மைகளை மேல்நாட்டார் தெளிவாக அறிய முடிகிறது. இருப்பினும், சிற்சில இடங்களில் உணர்ச்சியின்மையே உண்மையை அறிதற்குத் தடங்கலாகவுமிருக்கலாம்.

டாக்டர் சுவிட்சர் என்பவர் ஜெர்மெனிய தத்துவ ஞானி. இசையில் வல்லவர். இளமைதொட்டே எல்லா உயிர்களிடத்தும் இரக்கமுடையவர். அவர் இருபத்தொன் றும் வயதிலேயே இன்னும் 9 ஆண்டுகள், தனக்குப் பிடித்த சமய, இயல், தத்துவம், இசை, இவைகளைக் கற்பதில் கழிப்ப தென்றும் அதற்குப் பின் வாழ்நாள் முழுவதும் தன்னைக் காட்டிலும் கீழ்ப்பட்ட நிலையில் உள்ளவர்களுக்குத் தொண்டு புரிவது என்றும் உறுதியான தீர்மானங்கொண் டார். தான் தீர்மானித்தபடியே வாழ்க்கையை நடத்தினர். தான் முப்பது வயது நிரம்புவதற்குள் மேற்கூறிய மூன்று துறைகளிலும் டாக்டர் முதலிய பட்டங்களும், புகழும் பெற்றார்.

பின் ஒரு நாள் பிரெஞ்சுக்காரருக்குச் சொந்தமான ஆப்பிரிகா தேசத்தில் நீக்ரோக்களுக்குப் பணிபுரிய மருத்து வர்கள் தேவை என்று பாரிஸ்நகரக் கிருத்துவ சங்கப் பத்தி ரிகை மூலம் அறிந்தார். உடனே, தான் இதுவரை படித்தும் பிறருக்கு அறிவுரை நிகழ்த்தியும், வந்த அன்பைச் செயல் முறையில் காட்டுவதற்கு இதுவே தக்க வாய்ப்பு என்று எண்ணி அங்கே செல்லத் தீர்மானித்தார். அதற்காகவே மருத்துவக் கல்லூரியில் சேர்ந்து 6 ஆண்டுகள் படித்துத் தேர்ச்சி பெற்றார். தேர்ச்சி பெற்றதும மேற்கு ஆப்ரிக்கா வில் லேம்பரீன் என்ற இடத்திற்குச் சென்று சிறு குடிசை யில் நீக்ரோ நோயாளிகளைக் குணப்படுத்தத் தொடங்கினர். அந்த இடம் கொடிய விலங்குகள் உலவும் அடர்ந்த காடுக ளும், ஆறுகளும் நீர்நிலைகளும் நாகரிகம் அறியாத நீக்ரோக் களும் அடங்கிய பயங்கர-சூழ்நிலையில் உள்ளது. அவர், தன்னலமற்ற தொண்டாலும், சலியாத மனவலிமையாலும், ஆப்ரிக்க மக்கள் அன்பை மட்டுமல்லாமல் உலக மக்களு டைய உள்ளங்களையும் கவர்ந்தார். குடிசையில் ஆரம்பித்த மருத்துவநிலையம் அவர் 40 ஆண்டுகள் உழைத்ததின் பய ஞக 40 தனிக் கட்டடங்கள் அடங்கிய பெரிய மருத்துவச் சாலையாக வளர்ந்தது. இதனல் அவர் ஒரு சிறந்த சிந்தனை

யாளர் மட்டுமல்லர், வியத்தற்குரிய கர்மயோகி என்பதும் புலனாகிறது. அவர் சுமார் ஓராண்டிற்கு முன்தான் உலக வாழ்க்கையை நீத்தார்.

அவர் "இந்திய சிந்தனைகளும் அவைகளின் வளர்ச்சியும்" என்ற ஓர் அரிய நூல் இயற்றியுள்ளார். அந்நூலி லுள்ள சில கருத்துக்களை வாசகர்களோடு பகிர்ந்துகொள் வதே இக்கட்டுரையின் நோக்கம்.

அவர் இந்நூலின் முன்னுரையில் பின்வருமாறு கூறுகிறார்:

இந்திய சிந்தனைகளைப் புரிந்துகொள்வதாலும், அவை களை ஆராய்ந்து பார்ப்பதாலும், அவைகளுக்கும் ஐரோப்பிய சிந்தனைகளுக்கும் உள்ள வேறுபாடுகளை ஆய்வதாலும், ஐரோப்பிய சிந்தனை தெளிவடைவதோடு, செழிப்படையும். (இதன் மறுதலை இந்திய சிந்தனைக்கும் பொருந்தும்).

ஆர்தர் ஷோஃபவர் (Arther Schopenhaver) அவர்களின் நூல்களைப் படித்ததிலிருந்து இந்தியத் தத்து வங்கள் என் மனத்தை ஈர்த்தன. எல்லாச் சமய தத்துவங் களின் நோக்கமும் எப்படி மனிதன் பரம்பொருளோடு கலந்து நிற்கலாம் என்பதை ஆராய்வதே என்பது என் கருத்து. இந்தியச் சிந்தனைகள் இதைத்தான் முக்கிய நோக்கமாகக் கொண்டுள்ளன என்பதை அறிந்து இவை களின்மீது ஆர்வங்கொண்டேன். மேலும், இந்திய ஒழுக்க வியல் (Ethics) மனிதனுக்கும் மற்ற மனித சமுதாயத்திற் கும் உள்ள தொடர்பை மாத்திரம் குறித்ததல்ல; மனித னுக்கும் எல்லா உயிரினங்களுக்கும் உள்ள தொடர்பைக் குறித்தது என்பதும் என் மனத்தைக் கவர்ந்தது.

எல்லாத் தத்துவங்களுக்கும் இரண்டு சிக்கல்கள் பொது வாக உள்ளன. அவைகள் 1) உலகம், உலக வாழ்க்கை, இவைகளை உண்மைப் பொருள்கள் என்று போற்றுவதா, இவைகளை நிராகரிப்பதா என்பது. 2) ஒழுக்கவியலும், அதற்கும் மேற்கூறிய இரண்டு வாழ்க்கைத் தத்துவங்களுக்கு

முள்ள தொடர்பு. இவ்விரண்டு கேள்விகளுக்கு இந்திய சிந்தனைகள் என்ன விடையளிக்கின்றன என்பதை ஆராய்வதுதான் இந்நூலின் நோக்கம்.

ஒரு தத்துவத்திற்கு நாம் செய்யும் அஞ்சலி, அத்தத்துவத்தில் எவ்வளவு உண்மை இருக்கிறது என்று சோதித்து, அத் தத்துவத்தை இரக்கமின்றி அலசிப்பார்ப்பதுதான். ஆழ்ந்த இந்திய சிந்தனைகளிடத்தில் எனக்குள்ள பற்றுதலும், எனக்கும் அவைகளுக்குமுள்ள ஆன்மீக ஒற்றுமையும் இந்நூலில் விளங்கும்.

## மேல்நாட்டு சிந்தனைகளும் இந்திய சிந்தனைகளும்.

இவையிரண்டிற்கும் உள்ள வேற்றுமைக்கு முக்கிய காரணம், இந்திய சிந்தனையில் உலகத்தையும் வாழ்க்கையையும் வெறுத்தல் அல்லது நிராகரித்தல் முக்கிய இடம் பெற்றுள்ளது. ஐரோப்பிய சிந்தனைகளில் அவைகளைத் தழுவுதல் அல்லது உறுதிப்படுத்துதல் முக்கிய இடம் பெற்றுள்ளது.

இவ்விரண்டு மனப்பான்மைகளுக்கும் உள்ள வேற்றுமை பின்வருமாறு:—

உலகத்தையும் வாழ்க்கையையும் உறுதிப்படுத்தும் மனப்பான்மையின் போக்கு நாம் அனுபவிக்கும் உலகமும் வாழ்க்கையும் போற்றுதற்குரியன; முக்கியத்துவமுடையன; ஆகையால் அவைகளைப் போற்றிச் செம்மைப் படுத்தி, நிறைவு படுத்துவதில் அக்கரை கொள்ளவேண்டுமென்பது. உலகத்தையும் வாழ்க்கையும் நிராகரித்தல் மனப்பான்மையின் போக்கு நாம் அனுபவிக்கும் வாழ்க்கையும் நம்மைச் சுற்றியுள்ள உலக வாழ்க்கையும் பொருளற்றன; துன்பம நிறைந்தவை; ஆகையால் அவைகளினின்று விலகுவதுதான் தக்கது என்பது.

முன்னைய மனப்பான்மை, மக்களுக்குத் தொண்டு செய்து உலகத்தைச் செம்மைப்படுத்தத் தூண்டுகின்றது,

வேதகாலம் :-

ஆரியர்கள் இந்தியாவில் நுழைவதற்கு முன்பே இந்தியாவில் சிறந்த நாகரிகம் இருந்தது என்பது புதைபொருள் ஆராய்ச்சியால் தெரிகிறது. ஆரியர்கள் வருவதற்கு முன்பே திராவிட நாகரிகம சிறந்தோங்கியிருந்தது. திராவிட மொழி ஆரிய மொழிக்கு முற்றிலும் மாறானது. ஆரியர்கள் ஆப்கனிஸ்டான் வழியாக இந்தியாவிற்கு எப்போது வந்தார்கள் என்று நிச்சயமாகக் கூற முடியவில்லை. ஆனால் அது கி. மு. 1500க்கு முந்தியிருக்கும் என்பது தெரிகிறது. அவர்கள் தென்னாட்டிற்கு கி. மு. 300க்கு முந்தியே ஊடுருவியுள்ளனர். ஆனால் இங்கு ஆரியர்கள் வடநாட்டில் செய்ததுபோல், திராவிட நாகரிகத்தையும் சமயத்தையும் மாற்றித் தங்கள் நாகரிகத்தையும் சமயத்தையும் நிலைநாட்ட முடியவில்லை.

வேதம் என்றால் அறிவு என்பது பொருள். வேதம் பல சம்ஹிதைகளை (பாகங்களை) உடையது. இருக்கு வேதம் முதல் சம்ஹிதை. அது 10 பாகங்களையும் 1028 பாடல்களையும் உடையது. இவைகளில் சில பாடல்கள் கி. மு. 1500க்கு முந்தியன. இவைகளில் போற்றும் முக்கிய தெய்வங்கள் அக்கினி, இந்திரன், வருணன் ஆகியோர். இருக்கு வேதத்தில் சிந்துப் பிரதேசத்தைப் பற்றிய குறிப்புதான் உள்ளது. மற்றைய வேதங்களில் கங்கையாற்றைப் பற்றிய குறிப்பு வருகிறது. ஆகையால் இவை ஆரியர்கள் கங்கைப் பிரதேசத்தை அடைந்தபின்னர் இயற்றியவை என்று தெரிகிறது.

இருக்கு வேதத்தில் பிராமணர்கள் பங்கு கொள்ளவில்லை. அதர்வ வேதத்தில்தான் முக்கியத்துவம் அடைந்துள்ளனர். அதாவது ஆரியர்கள் கங்கை நதிக்கரையை அடைந்தபின்தான் பிராமணர்கள் புரோகிதத்தில் முக்கியத்துவம் அடைந்தனர். பிராமணர்கள் பொதுமக்களுடைய சமய வளர்ச்சியில் அக்கரை கொள்ளவில்லை ஒழுக்கவியலிலும் அக்கரை கொள்ளவில்லை. அவர்கள் முயற்சியெல்லாம்,

யாகம், மந்திரம் முதலியவற்றால் புலனுணர்வுக்கு அப்பாற்பட்டதின் இரகசியத்தை அறிந்துகொண்டு அதில் ஒன்றியிருப்பதில் ஈடுபட்டன. ஆகையால் அவர்கள் நோக்கு, உலகத்தையும் உலக வாழ்க்கையையும் நிராகரித்து மந்திரம் முதலிய உத்தியால் புலனுணர்வுக்கு அப்பாற்பட்டதை அடைதல்.

## உபநிஷதக் கோட்பாடுகள்

பரம்பொருளைப் பற்றிய ஆராய்ச்சி பிராமணங்களிலும், உபநிஷதங்களிலும் அடங்கியுள்ளன. பிராம்மணங்கள் உபநிஷதங்களைக் காட்டிலும் காலத்தால் முந்தியவை. இவைகளின் காலம் கி. மு. 1000 முதல் 500 வரை என்று சொல்லலாம். உபநிஷத் என்ற சொல்லுக்கே ஒருவர் அருகில் உட்காருவது என்பது பொருள். அதாவது இரகசியமாக உபதேசிப்பது என்பது பொருள். நான்கு வேதங்களும், பிராமணங்களும், உபநிஷதங்களும் இறைவன் அருளால் வெளிப்பட்டவை என்று கருதப்படுகிறது. அவைகள் பல நூற்றாண்டுகளாக எழுதாக் கிளவியாக ஆசிரியர் மாணுக்கன் என்ற முறையில் மனப்பாடம் செய்து காப்பாற்றப்பட்டவை. அவை, பிராமணர்களின் சொந்தச் சொத்தாகயிருந்தன. கி. பி. பல நூற்றாண்டுகளுக்குப் பின்னரே அவைகள் எழுதப்பட்டன.

உபநிஷதக் கொள்கைபின்படி, உலக நிராகரிப்பிலோ, பிரமத்தோடு ஒன்றுபடுதலிலோ ஒழுக்கவியலுக்கு இடமில்லை. தன்னைமற்ற உயிரினங்களிடத்திலும், மற்ற உயிரினங்களைத் தன்னிடத்திலும் காணவேண்டும் என்றகொள்கை உபநிஷத்தில் பெறப்பட்டாலும், இக்கொள்கைபினுலேயே மற்ற உயிரினங்களிடத்தில் அன்பும், இரக்கமுங்காட்ட வேண்டும் என்பது வற்புறுத்தப்படவில்லை. உயிரினங்களைக் கொள்வதோ துன்புறுத்துவதோ கூடாது என்ற கொள்கை உபநிஷத்தில் ஓரிரு இடங்களில் தவிர குறிப்பிடப்படவில்லை. ஆனல் உண்மை பேசவேண்டும், உண்மையாயிருக்கவேண்டும என்பவை வற்புறுத்தப்படுகின்றன.

உபநிஷதக் கொள்கைகள் முரண்பாடின்றி, ஒழுங்காய மைந்து தன்னிறைவு கொண்டவையல்ல. அவைகளில் பலதிறப்பட்ட கருத்துக்கள் அடங்கியிருக்கின்றன.

**சாங்கியம் :—**

சாங்கியம் என்றாலே கணக்கெடுத்தல், வரிசைப்படுத்தல் என்பது பொருள். அக் கொள்கையின்படி பாசம் 24 தத்துவங்களாகப் பிரிக்கப்படுகின்றது. சாங்கிய காரிகை கி. பி. முதல் நூற்றாண்டில் உண்டாகியதாயிருக்கலாம். சாங்கியக் கொள்கைப்படி உலகில் எண்ணற்ற ஆன்மாக்கள் (புருஷர்கள்) உள்ளன. இவைகள் எண்ணற்ற பாசக் கூறுகளோடு (பிரகிருதி) தொடர்பு கொண்டுள்ளன. ஆன்மாக்களும் பிரகிருதியும் நித்தியப் பொருள்கள். நுண்மையான உயிர், ஜடமாகிய பிரகிருதியோடு எப்படித் தொடர்பு கொண்டது? எதற்காகத் தொடர்பு கொண்டது? என்பது தொன்மையான தக்க விடை கிடைக்காத கேள்வி. சாங்கியக் கொள்கைப்படி எவ்வாறோ இவ்விரண்டும் ஒன்று பட்டன. எதற்காக ஒன்றுபட்டன என்ற கேள்விக்கு இச் சேர்க்கையால் உண்டான அனுபவத்தால் உயிர்கள் தாங்கள் ஜடத்திற்கு முற்றிலும் வேறுபட்டவை, சுதந்திரமானவை என்பதை அறிந்து கொள்வதற்காக என்று விடையளிக்கப் படுகிறது,

காலத்தை யுகங்களாகப் பிரிப்பது, குணங்களை மூன்றா கப் பிரிப்பது போன்ற அநேக இந்தியக் கொள்கைகள் முதன் முதலில் சாங்கியத் தத்துவத்தில் தொடங்கின.

சாங்கியத் தத்துவம் ஒரு மகத்தான சாதனை. தத்துவங்களின் அடிப்படையான கேள்விகளைத் தெளிவாக சிந்தித்து அவைகளுக்குத் தக்க விடையளிப்பதில் சாங்கியத் திற்கு நிகராக உலகத்தில் மற்றொன்றைக் கூறுவது அரிது. சாங்கியத் தத்துவத்தின் அடிப்படையில்தான் ஜைனமும் பௌத்தமும் தோன்றின. பின்னைய இரண்டும் சாங்கியத் தத்துவத்தோடு ஒழுக்கவியலைத் தொடர்புபடுத்தி அதைச் சிறிது மாற்றியமைத்தவை.

ஜைனம் :—

மஹாவீரரால் ஜைனம் சரித்திரத்தில் இடம் பெற்றது. அவர் மறைவு சுமார் கி. மு. 477 ஆக இருக்கும். பிறப்பி லிருந்து விடுதலை பெறுவதைப் பற்றிச் சாங்கியம் வெறும் கொள்கை அளவிலே சொல்லிச் சென்றது. ஆனல் ஜைன மும் பௌத்தமும் இவ்விடுதலையைச் செயல்முறையில் எப்படிப் பெறுவது என்பதைத் தீவிரமாக எண்ணி நடை முறையில் கொண்டுவரப்பெரும் இயக்கம் நடத்தின.

சாங்கியக் கொள்கைப்படி கர்மம் ஆன்மாவைப் பாதிப் பதில்லை; சூக்கும சரீரம்தான் பாதிக்கப்படும். ஆனல் ஜைனக் கொள்கைப்படி ஆன்மாவும் பாதிக்கப்படுகிறது. இக் கொள்கைப்படி உயிர் நன்னடத்தையினுல் உய்விக்கப் படுகிறது. ஆகையால், ஜைனத்தின் புதுக்கொள்கை ஒழுக்கவியல். விடுதலைக்கு வேண்டுவது அறிவு ஒன்றே என்னும், பிராமண, சாங்கியக் கருத்து கைவிடப்பட்டது. ஒழுக்கவியலுக்கு முதன்மை தரப்பட்டது.

முதன்முதலில் கொல்லாமை என்ற கோட்பாடு, மனிதன் தன்னைத் தூய்மையாக வைத்துக்கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தில் தோன்றியதே ஒழிய, பிற உயிர்கள்பால் கருணை காட்டவேண்டும் என்ற எண்ணத்தில் உண்டாகவில்லை. (தொடரும்)

மதிப்புரை

சைவ சித்தாந்த சிறுநூல்கள் சிறு ஆராய்ச்சிக் குறிப்பு. ஆசிரியர் ஸ்ரீமு. அருணசலம்.

சைவசித்தாந்த மகாசமாஜச் செயலாளர் திருச்சிற்றம் பல இல்லம் கிழக்கு மருதூர் நாராயணசாமி நாயுடு மணி விழா மலர்.

விலை 0–50 காசு. இது ஓர் அருமையான சிறிய ஆராய்ச்சி நூல், நூறு நூல்களுக்கு மேற்பட்ட சைவ சமயச் சிறு நூல்கள் பற்றிய விளக்கம் இங்கு தரப்பட்டுள்ளது. நூலின், பெயர் அதன் செய்யுள் தொகை ஆசிரியர், காலம், நூற்சிறப்பு, அச்சான வருஷம் ஆகிய குறிப்புக் கள் இங்கு தரப்பெற்றுள்ளன. இவற்றை ஆராய்ந்தால் சைவ இலக்கியச் செல்வம் இவ்வளவு விரிவானதாய் இருக்கிறதென்பதை நன்கு உணரலாம். (அம்பை)

சென்னைச் சைவசித்தாந்த மகாசமாஜ அமைச்சரும், கிழக்கு
மருதூர் பெருநிலக்கிழாரும் ஆகிய

திருவாளர் தி. கி. நாராயணசாமி நாயுடு அவர்கள்

## மணிவிழா இயன்மொழி வாழ்த்து.

திங்களும் கங்கையும் செஞ்சடை மேற்புனை
அங்கணர் தமிழ்ப்பழ ஆவணங் காட்டி
ஆண்டருள் நம்பி யாரூர் தோன்றிய
ஈண்டிய புகழ்சேர் எழில் நாவலூரும்
அறந்தரு நாவுக் கரசர் தோன்றச்
சிவப்பயிர் வளர்த்தொளிர் திருவா மூரும்
இருபால் விளங்க மருவிய சிறப்பின்
கிழக்கு மருதூரென வழங்குறு பதியிற்
பல்வளம் நிறைந்த செல்வக் குடியில்
திருவளர் கிருட்டின சாமி செய்த
நற்றவப் பயனாய்ப் பொற்புடன் தோன்றிய
நாராயண சாமியெனும் நற்பே ராள!
வானவர் போற்ற மன்றினில் ஆடும்
ஆனந்தக் கூத்தன் அருள்வளர் பெரும்பதி
தில்லையின் எல்லையில் திகழ்திரு வேட்களத்து
அன்று மலைமன் அன்னை மீனாட்சி
தன்பெயர் விளங்கத் தகவுடன் நிறுவிய
செழுங்கலை நியமத் தருங்கலை பயின்றோய்!
தமிழ்மொழி தமிழ்க்கலை தமிழர்நற் சமயம்
இவற்றியல் விளங்க இலங்குபன் னூல்கள்
உவப்புடன் கற்றுணர் உயர்குணத் தோன்றல்!
எந்நாட் டவர்க்கும் இறைவனும் முதல்வனைத்
தென்னா டுடைய சிவனெனச் சான்றோர்
முன்னாட் போற்றி வழிபடும் முறையினை
இந்நாள் உலகினர் யாவரும் உணரச்
சீரார் திருப்பா திரிப்புலி யூரில்
அருள்மிகு ஞானியா ரடிகள் தெருள்வளர்
மறைமலை யடிகளார் முதலிய மாண்பினர்
நிறுவிய சமய நிலைய மாகிய
சைவ சித்தாந்த சமாஜ மென்னும்
தெய்வநெறித் திருத்தொண்டு செய்பே ரவையின்
உறுப்பின னாகி ஓவா துழைக்கும்

பொறுப்புமிக் குடைய புகழ்சால் பெரியோய்!
செந்தமிழ்ப் பெரியார் திரு. வி. க. வுடன்
முந்துதமிழ்ப் பால சுப்பிர மணிய
முதலியார் முதலா முந்திய பெரியோர்
தம்மொடு பழகிய தகுதிசேர் அன்ப!
சமாச ஆண்டுவிழா தமிழ்நா டெங்கணும்
அழகுற நிகழ ஆவன புரிவோய்!
இமயம் முதலா இலங்கை யளவும்
அமைந்தொளிர் கோயில்க ளமைப்பும் பிறவும்
வரலாற்று முறையின் வழிநின் றுணர்ந்து
சித்தாந்த மென்னுந் திங்க ளிதழில்
தெரிவுற விளக்கும் செந்தமிழ் அறிஞ!
திருப்பாதிரிப் புலியூர்த் திருக்கோ யிலுக்கும்
அருட்பெருஞ் சோதி யாண்டவ னைத்தொழ
வடலூ ரதனில் வள்ளலார் நிறுவிய
சத்திய ஞான சபைக்கோ யிலுக்கும்
அறங்கா வலராய்த் திறம்பெற வுழைத்தனை
பொதிகைப் பதிப்பகம் புகழ்பெற வமைத்து
விதிமுறை நூல்கள் வெளியிட் டுதவினை;
சைவசித் தாந்த சமாஜ அமைச்சராய்
மெய்ம்மைத் திருப்பணி விருப்புடன் புரிவோய்!
தமிழும் சைவமும் தழைத்தினி தோங்க
அமைந்தநின் பணியின் ஆற்றலை யுணர்ந்தே
'தமிழ்ச்சைவத் தாளாளர்' எனத்தகு சிறப்பினை
அமிழ்துறழ் ஞானியா ரடிகள் அளித்தனர்.
அறுபதின் மேலும் ஆறும்பல் லாண்டுகள்
உறுதிசேர் நின்னுளத் துவகையை வளர்க்கச்
சுற்றமும் நண்பரும் சூழ்ந்தினிது போற்றக்
கற்றவர் பேரவைக் களிப்புடன் வாழ்த்தத்
தெய்வப் புலியூர்த் தில்லைமா நகரில்
வையகம் பொலிய மாநட மியற்றும்
அணியும் அமிழ்துமாம் ஐயன தருளால்
மணிவிழாப் பெற்றனை வாழிபல் லூழி!
மணிவிழாக் கோலம் மருவிய நீவிர்
மக்களும் சுற்றமும் மகிழ்ந்தினிது போற்ற
மனநலம் உடல்நலம் வளமுறப் பெற்று

நாடும் மொழியும் நலமுடன் வளரப்
பீடுறு பணிகள் பெட்புடன் இயற்றி
ஆடல் வல்லான் திருவரு ளதனால்
நீடு வாழியர் நிலமிசை மகிழ்ந்தே.

இங்ஙனம்
அன்புள்ள,

பு. ர. சுவாமிநாதன்,
க. வெள்ளைவாரணன்.



## சமாஜச் செய்திகள்

30-10-66 அன்று நடந்த சைவ சித்தாந்த சமாஜச் செயற்குழுக் கூட்டத்தில் பின் வரும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

தீர்மானம் 1:—

சில காலமாக சினிமா விளம்பரச் சுவரொட்டிகள் சென்னையில் ஜன நடமாட்டமுள்ள முக்கியமான இடங்களில் ஆபாசமாகச் சித்தரிக்கப்பட்டுக் காட்சியளிப்பது யாவரும் அறிந்ததே. இது பொதுவாக நன்மக்களுக்கு அருவருப்பை ஊட்டுவதுமல்லாமல், சிறப்பாக இளைஞர் உள்ளத்தைப் பாழ்படுத்தும் என்பதில் சந்தேகமில்லை. இது தமிழர் பண்பாட்டையும் சமய உணர்வையும் அவமானப்படுத்துவதாகும்.

சைவ சித்தாந்த மகா சமாஜம் இதை வன்மையாகக் கண்டிப்பதோடு, இந்த ஆபாசத்தை அகற்ற அரசாங்கம் உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறது. மற்ற சமய, சமூக நிறுவனங்களும் இந்த விஷயத்தில் அக்கரை எடுத்துக் கொள்ள வேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறது.

தீர்மானம் 2:—

இப்போது மாணவர்களிடம் நிலவும் கட்டுப்பாடற்ற போக்கிற்கு முக்கிய காரணம் அவர்கள் படிப்பில் சமய,

ஆன்மீக அடிப்படை இல்லாததே என்று சைவ சித்தாந்த மகா சமாஜம் கருதுகிறது. ஆகையால் அரசாங்கமும் கல்வி அதிகாரிகளும் பள்ளிகளிலும், கல்லூரிகளிலும், ஒழுக்க, சமய போதனைகளுக்கு முக்கிய இடம் கொடுத்து அவைகளைக் கட்டாயப் பாடங்களாக்க வேண்டும் என்று சமாஜம் வற்புறுத்துகிறது.

திரு. க. வச்சிரவேல் முதலியார், திரு. தி. கி. நாராயணசாமி நாயுடு அவர்களுக்கு 30-10-56ல் சமாஜத்தின் சார்பில் அன்பளிப்பு வழங்கியதற்கு அன்பர்கள் தந்துதவிய நன்கொடைகளின் பட்டியல்

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | திரு | கோ. மு. முத்துசாமி பிள்ளை | அவர்கள் ரூ | 25-00 |
| 2 | ,, | தி. கி. நாராயணசாமி நாயுடு | ,, | 25-00 |
| 3 | ,, | மு. அருணாசலம் | ,, | 25-00 |
| 4 | ,, | கொ. நீ. சிங்காரவேலு | ,, | 20-00 |
| 5 | ,, | S. நடேச முதலியார் (தாம்பரம்) | ,, | 10-00 |
| 6 | ,, | ச. சச்சிதானந்தம் பிள்ளை | ,, | 10-00 |
| 7 | ,, | க. அரங்கசாமி முதலியார் (பழனி) | ,, | 10-00 |
| 8 | ,, | கீழ்வண்டூர் இராஜு முதலியார் | ,, | 10-00 |
| 9 | ,, | S. இராமசாமி | ,, | 10-00 |
| 10 | ,, | G. வடிவேலாயுதம் | ,, | 10-00 |
| 11 | ,, | P. திருஞானசம்பந்தம் | ,, | 10-00 |
| 12 | ,, | புலவர் பி. எஸ். சண்முகம் பிள்ளை | ,, | 5-00 |
| 13 | ,, | அம்பை சங்கரன் | ,, | 5-00 |
| 14 | ,, | பூ. ஆலாலசுந்தரம் செட்டியார் | ,, | 5-00 |
| 15 | ,, | தே. த. கிருஷ்ணசாமி முதலியார் | ,, | 5-00 |
| 16 | ,, | வை. குஞ்சிதபாதம் பிள்ளை | ,, | 5-00 |
| 17 | ,, | புலவர் முருகவேள் | ,, | 5-00 |
| 18 | ,, | மு. நாராயணசாமி முதலியார் | ,, | 5-00 |
| 19 | ,, | சி. வி. கிருஷ்ணமூர்த்தி | ,, | 5-00 |
| | | | ரூ | 205-00 |

அன்பளிப்பிற்கான செலவு

| | | |
|---|---|---|
| இரண்டுபட்டு அங்கவஸ்திரங்கள் | ரூ | 59-03 |
| ஒரு வெள்ளிக் குத்துவிளக்கு | ,, | 137-00 |
| | ரூ | 196-03 |

மிகுதி 8-97 சமாஜக் கணக்கில் வரவு வைக்கப் பெற்றது.

## மதிப்புரை

**2. பூவாலை முருகன் பதிகங்கள்.**

*சீர்காழி கிருஷ்ணதாசர், ச. கிருஷ்ணராஜா.* வெளியிட்டோர் : கு. அருணாசல நயினார், பூவாலை, சிதம்பரம். இலவச வெளியீடு. குமரேசன் பதிகம், முருகக் கடவுள் பதிகம் என்ற இரு பதிகங்கள் இங்கு அச்சிடப்பட்டுள்ளன. முகவுரை இவ்வூரில் நடைபெறும் வழிபாட்டுச் செய்திகளைக் கூறுகிறது. படிக்க மகிழ்ச்சியுண்டாகிறது. நூல் அழகான அச்சு. இதை வெளியிட்டும் பிறவகையிலும் சமயத் தொண்டு புரிந்துவரும் நயினாருக்குச் சைவ உலகின் பாராட்டு உரியது. (மு அ.)

திருக்கடம்பநாதபுராணம் என்னும் நூல் ஒன்று வரப் பெற்றோம். இது திருவாவடுதுறை ஈசான தேசிகர் அவர்களால் அருளிச் செய்யப்பட்டது. பொதியர்பாளையம் தமிழ்ப் பண்டிதர் திரு. ப. மாசிலாமணி முதலியார் அவர்களால் பரிசோதித்து அச்சிடப்பெற்றது. பல பெருமக்கள் பாராட்டுரைகளுடன் கூடியது.

காஞ்சிபுரத்தைச் சேர்ந்துள்ள பல திருத்தலங்களில் ஒன்று கடம்பர் கோயில் என்பது. இது வைப்புத்தலமாகக் கருதப்படுகிறது. அப்பர் பெருமான் கடம்பையிளங்கோயில் என க்ஷேத்திரக் கோவையில் குறிப்பிடுகிறார். அது இதுவே என்பது ஒருசாரார் கொள்கை. மற்றொருசாரார் திருக்கடம்பூர்தான் கடம்பை என மருவி வந்துள்ளது எனக் கருதுகின்றனர். அறிஞர் இக் கடம்பை பற்றி ஆய்ந்து முடிவு மேற்கொள்வாராக.

இக் கடம்பர்கோவிலுக்குத் தேவாரப்பாடல் இருந்து கிடையாதிருக்கவேண்டும் எனப் பலர் கருதுகின்றனர். இத் தலத்திலுள்ள பெருமானை முருகர் பூசித்தார். ஆகவே திருக்கடம்பநாதர் என்பது இவ்வூரிலுள்ள பெருமானுக்குரிய பெயராகும். இத்தலம், மூர்த்தி, தீர்த்தங்களின் பெருமையை மிகவும் சிறப்பாக இப் புராணம் கூறுகின்றது. 17 அத்தியாயங்களில் 639 செய்யுள்களோடு இந்நூல் விளங்குகின்றது. பாக்களின் நடைச்சிறப்புப் பற்றிக் கூறவேண்டுவதில்லை. யாவரும் வாங்கிப் படித்துப் பயன்பெறுவார்களாக. விலை ரு. 1-25. கிடைக்குமிடம் : வித்துவான் மா. ஜயசெந்தில்நாத முதலியார், தமிழாசிரியர், பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளி, காஞ்சிபுரம். என்பதாம். தபால் செலவு வேறு.

(அம்பை)

ஸ்ரீமத் அருணகிரிநாத சுவாமிகளின் சரித்திரச் சுருக்கம் என்னும் நூல் ஒன்று வரப் பெற்ருேம். இது ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் சீடர்களுள் ஒருவரான திரு. மா. துரைசாமி முதலியார் அவர்களால் சுவாமிகளின் சொற்பொழிவைக் கேட்டுச் சுருக்கமாக வரையப் பெற்றது. சுவாமிகளின் சீடரான குமாரசிவம் என்ற திரு. தா. வேங்கடாசல முதலியார் அவர்களால் வெளியிடப் பெற்றது.

ஸ்ரீமத் அருணகிரிநாதர் வரலாறு பலவாறு எழுதப் பட்டும் பேசப் பட்டும் வருகிறது. ஆனால் இந் நூலில் பாம்பன் சுவாமிகள் நன் முறையில் திருப்புகழ், திருவகுப்பு முதலிய அருணகிரி நாத சுவாமிகள் அருள் நூல்களிலுள்ள அகச் சான்றுகளின் துணை கொண்டே ஆய்ந்து வரலாறு கூறுகின்ருர்கள், இதில் பல கதைகள் பொய்மை கலந்தன வென மறுக்கப்படுகின்றன. அம் மறுப்பு போற்றத்தக்க தாகவேயுள்ளது. ஆதலின் உண்மை வரலாறு காண விரும்புவோர் இந்நூலைப் படித்தல் அவசியம். இதன் விலை 30, காசுகள். கிடைக்குமிடம்:— தா. வேங்கடாசல முதலியார், 1/34 ஆபீஸ் வேங்கடாசல முதலி தெரு, திருவல்லிக் கேணி, சென்னை—5. (அம்பை)

1. சிவபரத்வம் (15 ps.), 2. சிறுத்தொண்ட நாயனுர் (25 ps.), 3. கண்ணப்ப நாயனுர் (30 ps.), 4. திருநீலகண்ட நாயனுர் (40 ps.) 5. காரைக்கால்-அம்மையார் (35 ps.) திருவையாறு அண்ணாஸ்வாமி சிரௌதிகள் இயற்றியது, கிடைக்குமிடம்: இயற்றியவர், 6. வேலாயுத முதலித் தெரு, நுங்கம்பாக்கம், சென்னை—34.

இந்த நூல்களின் ஆசிரியரான சிவபரத்துவத்தை ஆர்வத்துடன் பரப்பும் ஸ்ரீ ஹரதத்த சிவாசாரிய பக்தர் திரு அண்ணாஸ்வாமி சிரௌதிகளைச் சைவ உலகம் அறியும். (1) இலக்கமிட்ட நூல் பல வேதவாக்கியங்களைக் கொண்டும், தேவார அருளுரைகளைக் கொண்டும், ஸ்ரீமத் ஆதிசங்கரர் வாக்குகளைக் கொண்டும் சிவபரத்துவத்தை தெளிவுற விளக்குகிறது. அரனும், அரியும் ஒன்றென்று கூறும் பிரசாரத்தையும், ஸ்மார்த்தக் கொள்கையையும் திருவெம்-பாவை, திருப்பாவை மாநாடுகளில் வைணவர்கள் கொண்டா

டப் பெற்றிருப்பதால் அவைகளின் அவசியத்தையும் கண்டிக்கிறது. 2. – (5) இலக்கமிட்ட நூல்களில் ஆசிரியர் சிவபரத்துவத்தையும் அடியார்களின் பத்திமையையும் விளக்க பல நுட்பமான கருத்துக்களை எழுதியுள்ளார். திரு C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்களின் சிறப்பான உரையிலும் சிற்சில விடங்களில் குறை காண்கிறார்; உதாரணமாகச் சிறுத்தொண்டர் புராணத்தில் "முத்திரை யுடையோன்" என்ற தொடருக்கு பசு, ஆடு, எருமை என்று பொருள் கொள்ளாது காப்பசுக்களையே குறிப்ப தாகச் சொல்வார். கண்ணப்பநாயனார் புராணத்தில் சிவ பூசையில் நிர்மால்யத்தைக் கூர்ச்சத்தால் விலக்கவேண்டு மென்ற விதிகொண்டு, நாயனார் தம் செருப்பால் விலக்கினார் என்றும், 'பொன் செருப்பு' என்று சேக்கிழார் கூறியது அழகிய செருப்பல்ல, இறைவன் ஹிரண்ய பாஹுயனாகை யால், தீண்டிய செருப்பும் பொன்னாயிற்று என்று அழகுபட விளக்கம் கூறுகிறார். திருநீலகண்டநாயனார் சரிதையில், 'எம்மைத் திருநீலகண்டம்" என்ற தொடரில் 'எம்மை' என்ற சொல்லுக்கு அழகியதோர் பொருள் தருகிறார். காரைக்கால் அம்மையார் புராணத்தில் பலவிடங்களில் திரு C. K. S. உரையில் கருத்து வேற்றுமைகள் கொள்கிறார். அம்மையார் தன் நாயகன் இரண்டாம் கனியைக் கேட்டபோது, உட்சென்றது, இறைவனை விண்ணப்பித்துக் கனி பெறுவதற்கல்லவென்று ஆசிரியர் பொருள் கொள்கிறார். அது கணவனை ஏமாற்றுவதாகுமென்றும், அம்மை யார் உட்சென்றது, அடியார் பூசனையால் கணவன் பூசனைக்குப் பங்கம் ஏற்பட்டதால் திகைத்தாள் என்றும் ஆசிரியர் பொருள் கொள்கிறார். "ஈங்கிவன் குறித்த கொள்கை, இனி இவனுக்காக..." என்ற வரியில் 'இவன்' அல்லாமல் 'இவர்' என்பதுதான் சேக்கிழார் வாக்காக இருத்தல் வேண்டுமென்று ஆசிரியர் கருதுகிறார்.

ஆசிரியருக்குப் பழைய உரையாசிரியர்கள்பால் மதிப்பில்லை யென்று எண்ணுதல் பொருந்தாது. தம் கருத்தில் தோன்

றினைவைகளை அடக்கமாகத் தெரிவித்துள்ளார். இத்தகைய விமர்சன நூல்கள் தக்கோர்களால் எழுதப்படுவது வேண்டுவதே. —நல். மு.

விநவெண்பா மூலமுமுரையும் என்னும் நூல் ஒன்று வரப்பெற்றோம். இது கொற்றவன்குடி உமாபதி சிவாச்சாரிய சுவாமிகளால் அருளிச் செய்யப்பட்டது. சைவ மெய்கண்ட சாத்திரங்கள் பதினான்கனுள் இதுவும் ஒன்றாகும். இது அகில இலங்கைச் சைவப் புலவர் சங்கத்தால் வெளியிடப்பட்டது. இதற்கு உரையாசிரியர் சைவப் புலவர் சித்தாந்த பண்டிதர் திரு. இ. செல்லத்துரை அவர்கள் ஆவர். இந்நூல் மேற்குறித்த சங்கத் தலைவர் திரு. வ. செல்லையா அவர்களின் அரும்பெறலன்னையார் திருமதி வயிரவப்பிள்ளை சின்னத்தங்கம் அவர்களின் நினைவு மலராக வெளியிடப் பெற்றுள்ளது.

இந்நூல் வெண்பா, கொண்டுகூட்டு, பதவுரை, கருத்துரைகளைக் கொண்டுள்ளது. கற்றோர்க்கு மிக விளங்கும் எளிய முறையில் இவ்வுரையுள்ளது. இத்தகைய உரைகள் இக்காலத்து மிக வேண்டாற்பாலன. மேலும் சைவர் ஒவ்வொருவரும் தங்களில்லத்தில் நிகழும் சிறப்புகளில் வீண் ஆடம்பரச் செலவுகட்கு இடங்கொடுக்காது இதுபோன்ற நிலைத்த பயனுடைய வெளியீடுகளை வெளியிடுவது மிகவும் வரவேற்கத்தக்க ஒன்றாகும். விலை குறிக்கப் பெறவில்லை. கிடைக்குமிடம் :—

அகில இலங்கைச் சைவப் புலவர் சங்கம், ''சிவமாய்'', 20 ஸ்ரான்லி வீதி, யாழ்பாணம், இலங்கை. (அம்பை)

அம்பை திரு. அ சங்கு முதலியார் அவர்களின் நான்காவது ஆண்டு நினைவு மலர் ஒன்று வரப்பெற்றோம். அம்பை அருள் திரு. சுவாமிநாத ஐயா அவர்களின் இருபதாவதாண்டுக் குருபூசையின்போது இம்மலர் வெளியிடப் பெற்றது. இம்மலரில் அருள்திரு ஐயா அவர்கள் அருளிய பாடலும், ஐயா அவர்களைப் பற்றி பிறர் அருளிய பாடல்களும் திருவாசகம் சிவபுராணமும் ஐயா அவர்களைப் பற்றிய நூற்றெட்டுத் தமிழ்த் திருப்பெயர்

களடங்கிய அர்ச்சனையும் உள்ளன. விலை குறிக்கப் பெற வில்லை. நூல் கிடைக்கும் இடம்:— அ. நடராஜ முதலியார், செட்டப்புளிக் கீழத் தெரு, அம்பாசமுத் திரம், நெல்லை மாவட்டம். (அம்பை)

கட்டுரைப் பூங்கா என்னும் நூல் ஒன்று வரப்பெற்றோம். எழுதியவர் வித்வான் மா. சுப்பிரமணியன், அமுதப் பதிப் பகம், காரைக்குடி. நூல் கிடைக்குமிடமும் அதுவே. விலை ரூ. 1–50 ஆகும்.

இந்நூலில் 20 கட்டுரைகளும் அணிகளைப்பற்றிய சிறு விளக்கமும் உள்ளன. உயர்நிலைப் பள்ளி மாணவர் கள் தமிழ்க் கட்டுரை எழுதி முன்னேற துணையாகும் நூல் இது. ஆசிரியர் நன்முறையில் இப் பூங்காவை ஆக்கியுள்ளார் ஆனால் கட்டுரைகளின் நடுவே அவ்வப் பாடங்களில் வாய்ப்பு நேரும்போதெல்லாம் இறைவனைப் பற்றியும் குறிப்பிட்டு மாணவர்களைத் தெய்வ நினைப் புள்ளவர்களாக ஆக்க வேண்டும். இதுபோன்ற மாதிரிக் கட்டுரைகளடங்கிய நூலில் அம்முறை பின்பற்றப்பட்டி ருந்தால் மிக நலமாயிருக்கும். செய்யுள் நலம் பாராட்டலில் திருவாசகச் சிறப்புப் பற்றிக் குறிப்பிட்டி ருப்பது மெச்சத்தக்கது. வாங்கிப் பயனுறுதல் நலம்.

(குறிப்பு:– எடுத்துக்காட்டாக அறிவியல் வளர்ச்சி என்ற முதற்கட்டுரையில் ஆசிரியர் நன்கு கட்டுரையை எழுதி முடித்திருக்கிறார். இறுதியாக விஞ்ஞானத்தின் மேலாக விளங்கும் ஆண்டவனின் தன்மையையும் குறிப் பிட்டிருப்பின் மிக நன்மை பயக்கும். "அதற்கு எல்லாம் வல்ல ஆண்டவனின் அருளும் முன்னின்று துணை புரி வதாகுக" என்று ஒரு வாக்கியமிருக்கின் மாணவனுக்கு விஞ்ஞானத்தின் மேலாக ஆண்டவன் ஒருவனிருக்கிறான். அவன் பேராற்றல் படைத்தவன். அவன் நினைத்தால் எல்லாம் ஒரு நொடியில் நிகழும். இன்னோரன்ன பல எண்ணங்களை எண்ண வாய்ப்புண்டு. ஆகவே இம் முறையையும் கட்டுரையாளர்கள் பின்பற்ற வேண்டுகின்றோம்.) (அம்பை)

காவேரிப்பாக்கம் சன்மார்க்க வார வழிபாட்டுச்சங்க ஐந்தாம் ஆண்டு நிறைவு விழா கொங்கணேசுவரர் ஆலயத்தில் 14, 15, 16-10-66 ஆம் நாள்களில் சைவப் பெரியார், திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை B A., L. T., திரு. S. ஆறுமுக முதலியார் M. A., B. T., ஆகியோர் தலைமையில் பல பெரியோர்களின் பேச்சுக்களுடன் சிறப்புற நிகழ்ந்தது.

## கார்த்திகை மாத விசேட தினங்கள்

3 (18-11-66) கந்தர்சட்டி விழா.
12 (27-11-66) கணம்புல்ல நாயனார் விழா.
ஷெ கார்த்திகை விளக்கீட்டு விழா.
21 (6-12-66) மெய்ப்பொருள் நாயனார் விழா.
22 (7-12-66) ஆனாய நாயனார் விழா.
28 (13-12-66) மூர்க்க நாயனார் விழா
29 (14-12-66) சிறப்புலி நாயனார் விழா.

## தி. கி. நாராயணசாமி நாயுடு அவர்களின் அறுபதாண்டு நிறைவுவிழா

சைவ சித்தாந்த மகாசமாஜத்தின் செயலாளரான தி. கி. நாராயணசாமி நாயுடு அவர்களின் அறுபதாண்டு நிறைவு விழா சிதம்பரத்தில் 16-10-66 அன்று மிகவும் சிறப்பாக நடந்தது. அவர் எந்த ஆடம்பரத்தையும் விரும்புபவர் அல்லராதலால், யாருக்கும் நிகழ்ச்சியைத் தெரிவிக்கவும் இல்லை, யாரையும் அழைக்கவும் இல்லை, எனினும், சித்தாந்தத்தில் வெளிவந்த குறிப்பைப் பார்த்து அன்பர் அனேகர் வந்திருந்தார்கள். சென்னையிலிருந்து சமாஜ அங்கத்தினர் முதுபேரன்பர், நடேச முதலியார், ஆலாலசுந்தரம் செட்டியார், காரைக்கால் இராஜகணபதி பிள்ளை ஆகியோர் கலந்து கொண்டது குறிப்பிடத்தக்கது. 15, 16 இரண்டு நாளும் விழாவை யொட்டிய சடங்குகள் சிதம்பரம் ந. சிவப்பிரகாசதேசிகர் அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றன. பு. ர. சுவாமிநாதன் க. வெள்ளைவாரணனார் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினார்கள். மஞ்சக்கொல்லை ரா. திருநாவுக்கரசு பொன்னாடை போர்த்தினார். விழாமலராக சித்தாந்தம் ஆசிரியர் எழுதிய "சைவ சித்தாந்தச் சிறுநூல்கள்" என்ற புத்தகமும் கந்தரலங்காரமும் வெளியிடப்பட்டன.

புரசைத் திருநெறிக் கழக 68ஆம் திங்கள் வழிபாடு தாம்பரம் செல்வ விநாயகர் ஆலயத்தில் 30-10-66 அன்று மாலை சிறப்புற நிகழ்ந்தது.

நம் சமாஜ அன்பர் குன்றத்தூர் சி. பாலசுப்பிரமணியம் அவர்கள் திருமகளார் திருவளர் செல்வி சௌந்தராம்பிகைக்கும் ஈக்காடு இரத்தின முதலியார் அவர்கள் குமாரன் திருவளர் செல்வன் கோபாலனுக்கும் திருமணம் 21–10–66 வெள்ளிகாலை திருவள்ளூரில் சிறப்புற நிகழ்ந்தது. புதுமணமக்கள் எல்லா நற்பேறுகளுமினிதுற்றுப் பன்னெடுங்காலம் நன்குவாழ உமையொருபாகன் திருவருள் முன்னிற்க அவனருளையே வாழ்த்தி வணங்குகிறோம்.

அருள்திரு காசிவாசி அருள் நந்தித் தம்பிரான்சுவாமிகள் நிறுவிய கந்தபுராண படனநிதிச் சார்பில் கந்தபுராண படன நிறைவுவிழா திருவருணை அருணாலேச்சுரர் கோயிலில் 24–10–66 அன்று நிகழ்ந்தது. திருவருணை வித்துவான் இரா. சிவானந்தம் படனம் நிகழ்த்தியது குறித்துப் பலர் பாராட்டிப் பேசினர்.

பண்டிதை கிருஷ்ணவேணியம்மையார் அவர்கள் 10-10-66 அன்று இறைவன் திருவடி நிழல் அடைந்தது தெரிந்து மிக வருந்துகிறோம். பெண்களுலகத்திற்குச் சிறந்த எடுத்துக் காட்டாய்த் திகழ்ந்த அவ்வம்மையார் நம் சமாஜத்தோடும் மிகத் தொடர்புடையோராய் விளங்கினர்கள். வைணவ சமயப்பற்று உடையோராயினும் சைவத்திலும் ஈடுபாடுடையவர்கள். பக்தி நெறி உலகில் பரவ வேண்டும் என்பதில் மிகவும் ஆசையுடையவர்கள். 1932ஆம் ஆண்டில் நம் சமாஜ இருபத்தேழாம் ஆண்டு விழா திருவிற்கோலத்து நிகழ்ந்தபோது நம் அம்மையாரவர்கள் மாதர் மாநாட்டிற்குத் தலைமை வகித்துச் சிறந்த கருத்துக்களைத் தெரிவித்தார்கள். அத்தகைய அம்மையார் பிரிவு குறித்த இரங்கல் கூட்டம் 23-10-66 அன்று சிறப்புற திருவல்லிக்கேணியில் நிகழ்ந்தது. நம்முலகை விட்டுப் பிரிந்த அவ்வம்மையாரின் உயிர் சிறந்த பேறுற்று அமைந்திருக்குமென்பது உறுதி. அவர்கள் பேரானந்தப் பெருவாழ்வடைய இறைவன் திருவருள் செய்ய வணங்கி யமைவதோடு அவர்கள் குடும்பத்தினருக்கும் சமாஜ அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

---

**Printed at the Sengunthamithran Press, 33, Armenian St , Madras-1 by V. Sambandan, Edited by M. Arunachalam, M. A., and Published by S. Satchidanandam Pillai, B. A., L. T., for the Saiva Siddhantha Maha Samajam, 12, East Mada St., Mylapore, Madras-4.**